**மேல் வரும் நூல்களில் உள்ள தகவல்களை வாசிப்போம். இடைவெளிகளை நிரப்புவோம்.**

எனது பெயர் ________________________ நான் ________________________ தரத்தில் படிக்கின்றேன்.

நான் ________________________ விரும்பி வாசிப்பேன்.

நான் விரும்பும் புத்தகம் ________________________.

அதை ________________________ எழுதினார். அதன் விலை ________________________

## செயற்பாடு 9

**கீழ்காணும் நூலை அடிப்படையாகக் கொண்டு நான்கு வாக்கியங்களை எழுதுவோம்.**

| | | |
|---|---|---|
| பெயர் | - | மடொல்தூவ |
| எழுத்தாளர் | - | மார்ட்டின் விக்ரமசிங்க |
| விலை | - | 180 ரூபா |
| வெளியீடு | - | மவுண்ட் அச்சகம் |

1. ________________________
2. ________________________
3. ________________________
4. ________________________

## செயற்பாடு 10

**பின்வரும் சுவரொட்டியை வாசிப்போம். கலந்துரையாடுவோம்.**

# மாபெரும் புத்தகக் கண்காட்சி 2017

**இடம் : பண்டாரநாயக்க சர்வதேச மாநாட்டு மண்டபம் கொழும்பு.**

**காலம் : 2017–06–19**

**நேரம் : காலை 9.00**
**மாலை 5.00**

**தமிழ், சிங்கள, ஆங்கில மொழிப் புத்தகங்களை இங்கு வாங்கலாம்.**

புத்தகங்களுக்கு 20% விலைக் கழிவு



*அனைவரும் வருக!*

*பயன் பெறுக!*

**“வாசிப்பு மனிதனை முழு மனிதனாக்கும்.”**

**கல்வி வெளியீட்டுத் திணைக்களம்**
**இசுறுபாய, பத்தரமுல்லை.**

## செயற்பாடு 11

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.**

1. *சுவரொட்டி எதைப் பற்றியது?*

2. *கண்காட்சி நடைபெறும் இடம் எது?*

3. *கண்காட்சி நடைபெறும் திகதி எது?*

4. *புத்தகங்களுக்கு வழங்கப்படும் விலைக்கழிவு எவ்வளவு?*

5. *கண்காட்சி யாரால் நடாத்தப்படுகிறது?*

செயற்பாடு 12 (21)

**பாடலைச் செவிமடுப்போம். பாடி மகிழ்வோம்.**



## புத்தகம்

சின்னச் சின்னப் புத்தகம்
சிறந்த நல்ல புத்தகம்
ஆடிப் பாடி மகிழவே
பாடல் உள்ள புத்தகம்

வண்ண வண்ண அட்டையில்
வடிவமைந்த புத்தகம்
எண் எழுத்துப் பாடமும்
இருக்கும் இந்தப் புத்தகம்

நல்ல நல்ல கதையெல்லாம்
நாமெடுத்துப் படிக்கலாம்
மெல்ல மெல்ல நாமுமே
மேன்மை பெற்று வாழலாம்.

# செவிமடுப்போம் உச்சரிப்போம்





22

தமிழ்

பணம்

கண்காட்சி

மண்டபம்

சிங்களம்

ஆங்கிலம்

திணைக்களம்



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. කඩයකින් පොතක් මිල දී ගැනීම | | | |
| 2. සුදුසු ප්‍රශ්නාර්ථ පද භාවිත කිරීම | | | |
| 3. තමා කැමති පොත ගැන කීම හා ලිවීම | | | |
| 4. පෝස්ටරයක් කියවා තේරුම් ගැනීම | | | |
| 5. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී උච්චාරණය කිරීම | | | |

# 8 பயணம் போவோம்

## செயற்பாடு 1

**படத்தை அவதானிப்போம். கலந்துரையாடுவோம்.**




| தூரசேவை நேர அட்டவணை | දුරස්ථ සේවා කාල සටහන | Long Distance Time Table | | |
|---|---|---|---|---|
| வவுனியா | වව්නියා | Vavuniya | 05:00AM<br>07:30AM | 01:30PM<br>02:30PM |
| மன்னார் | මන්නාරම | Mannar | 05:00AM<br>06:45AM | 10:00PM<br>11:50PM |
| முல்லைத்தீவு | ත්‍රිකුණාමලය | Trincomalee | 05:00AM<br>06:00AM | 03:30PM<br>06:00PM |
| திருகோணமலை | ත්‍රිකුණාමලය | Trincomalee | 06:00AM<br>11:00AM | 04:45PM<br>07:00PM |
| பொத்துவில் | පොතුවිල් | Poththuvil | 08:30PM | |
| மட்டக்களப்பு | මඩකලපුව | Batticoloa | 06:30AM | |
| கல்முனை | කල්මුණේ | Kalmunai | 06:30PM | |
| அக்கரைப்பற்று | අක්කරේපත්තුව | Akkarapattu | 05:30AM<br>09:45AM | 04:00PM<br>05:00PM |
| கொழும்பு | කොළඹ | Colombo | 08:00AM<br>06:30AM | 04:30PM<br>05:30PM |
| கதிர்காமம் | කතරගම | Kataragama | 06:20PM | |
| கண்டி | නුවර | Kandy | 05:10AM<br>07:15AM | 07:15PM<br>04:45PM |
| பதுளை | බදුල්ල | Badulla | 06:20AM | 09:30PM |
| மொனராகலை | මොණරාගල | Monaragala | 04:30AM | 05:15PM |

உங்கள் பயணம் சிறப்பாக அமையும்...
සුභ ගමනක්...

23

**செவிமடுப்போம். விடையளிப்போம். வாசிப்போம்.**

✦ அப்பா ▲ சிவா ◆ அம்மா ○ நேரக்காப்பாளர்

✦ சிவா, வேகமாய் வாங்க. பஸ் நிலையத்துக்குப் போவோம்.

▲ சரி அப்பா. போவோம்.

- அதோ நேரக் காப்பாளர்.
- கொழும்புக்கு, எத்தனை மணிக்கு பஸ் இருக்கு?
- இப்பதான் ஒரு பஸ் போனது.
- அடுத்த பஸ் எத்தனை மணிக்கு.
- நேர அட்டவணை அங்கே இருக்கு. பாருங்க.
- நன்றி.
- நேர அட்டவணையைப் பார்ப்போம்.
- எட்டு மணிக்கு ஒரு பஸ் இருக்கு. நாங்கள் அந்த பஸ்சில் போவோம்.
- அப்பா எனக்கு AC பஸ்ஸில்தான் போக வேணும்.
- AC பஸ்ஸில் டிக்கட் சரியான விலை.
- பரவாயில்லை, நாங்கள் அந்த பஸ்ஸில் போவோம்.
- அதோ AC பஸ் வருகிறது.
- நாங்கள் ஏறுவோம்.
- கவனமாக ஏறுங்க.
- சரி அம்மா.

## செயற்பாடு 2 (23)

**உரையாடலைச் செவிமடுப்போம்; சரி (✓) பிழை (✗) இடுவோம்.**

1. *அம்மாவும் அப்பாவும் சிவாவும் கொழும்பு புகையிரத நிலையத்தில் இருக்கிறார்கள்.* ☐
2. *சிவாவுக்கு* AC *பஸ்ஸில் போவதற்கு விருப்பம்.* ☐
3. AC *பஸ்ஸின் டிக்கட் விலை குறைவு.* ☐
4. *எல்லோரும் யாழ்ப்பாணம் பஸ் நிலையத்தில் இருக்கிறார்கள்.* ☐

## செயற்பாடு 3 (23)

**உரையாடலைச் செவிமடுப்போம். வினாக்களுக்கு விடை கூறுவோம். எழுதுவோம்.**

1. *உரையாடல் எந்த இடத்தில் நடைபெற்றது?*

______________________________

2. *பஸ் நிலையத்தில் யார் யார் இருக்கிறார்கள்?*

______________________________

3. சிவாவுக்கு எந்த பஸ்ஸில் பயணம் செய்வதற்கு விருப்பம்?

______________________________

4. பஸ் எத்தனை மணிக்குப் புறப்படும்?

______________________________

## செயற்பாடு 4

**பின்வரும் சொற்களை அவதானிப்போம். கலந்துரையாடுவோம். பொருத்தமான சிங்களக் கருத்தைக் கண்டு பிடிப்போம். இலக்கமிடுவோம்.**

| | | | |
|---|---|---|---|
| 1. | பயணச் சீட்டு | | දුර ගමන් සේවා |
| 2. | பேருந்து நிலையம் | | රාත්‍රී සේවාව |
| 3. | பயணப்பொதி | | ප්‍රවේශ පත්‍රය |
| 4. | நேர அட்டவணை | | ගමන් මල්ල |
| 5. | நீண்ட தூரச் சேவை | | ශීඝ්‍රගාමී |
| 6. | இரவு நேரச் சேவை | | බස් නැවතුම්පොළ |
| 7. | கடுகதிச் சேவை | | කාල සටහන |

| **பேச்சு மொழி** | **எழுத்து மொழி** |
| --- | --- |
| வாங்க | வாருங்கள் |
| இப்ப | இப்போது/இப்பொழுது |
| பாருங்க | பாருங்கள் |
| டிக்கட் விலை | பயணச் சீட்டு கட்டணம் |
| போக வேணும் | போக வேண்டும் |
| ஏறுங்க | ஏறுங்கள் |

## சொல்அறிமுகம்

நேர அட்டவணை - කාල සටහන

அதிகம் - වැඩියි

ஏறுவோம் - නගිමු

கவனமாக - පරිස්සමින්

எத்தனை மணிக்கு - කීයට ද?

## செயற்பாடு 5

**பின்வரும் வாக்கியங்களில் நிறந்தீட்டிய எழுத்துக்களை அவதானிப்போம். கலந்துரையாடுவோம்.**

1. கொழும்புக்கு பஸ் எத்தனை மணிக்கு இருக்கு.
2. மகனுக்கு AC பஸ்ஸில் தான் போக வேணும்.
3. நாங்கள் பேருந்து நிலையத்துக்குப் போவோம்.
4. ஜனனிக்கு காய்ச்சல்.
5. அந்த பஸ் எத்தனை மணிக்குப் போகும்?

**பின்வரும் அட்டவணையை அவதானிப்போம். கலந்துரையாடுவோம்.**

| | | | |
|---|---|---|---|
| உ | கொழும்பு<br>வகுப்பு<br>மட்டக்களப்பு | க்கு | கொழும்புக்கு<br>வகுப்புக்கு<br>மட்டக்களப்புக்கு |
| இ | காலி<br>தம்பி<br>ஜனனி | | காலிக்கு<br>தம்பிக்கு<br>ஜனனிக்கு |
| ஐ | பதுளை<br>மாத்தளை<br>அம்பாறை<br>தங்கை | | பதுளைக்கு<br>மாத்தளைக்கு<br>அம்பாறைக்கு<br>தங்கைக்கு |

| | | | |
|---|---|---|---|
| ஆ | நுவரெலியா<br>வவுனியா<br>அம்மா<br>அப்பா | வுக்கு | நுவரெலியாவுக்கு<br>வவுனியாவுக்கு<br>அம்மாவுக்கு<br>அப்பாவுக்கு |
| ம் | யாழ்ப்பாணம்<br>சிலாபம்<br>அனுராதபுரம்<br>புத்தளம் | த்துக்கு | யாழ்ப்பாணத்துக்கு<br>சிலாபத்துக்கு<br>அனுராதபுரத்துக்கு<br>புத்தளத்துக்கு |

## செயற்பாடு 6

**வினாக்களை எழுப்புவோம். விடை கூறுவோம்.**

உதாரணம் :- நீங்கள் எங்கே போறீர்கள்?

நான் கொழும்புக்குப் போறேன்.

1. ______________________________ ?
______________________________ நுவரெலியா

2. ______________________________ ?
______________________________ யாழ்ப்பாணம்

3. ______________________________ ?
______________________________ அம்பாறை

4. ______________________________ ?
______________________________ காலி

5. ______________________________ ?
______________________________ மட்டக்களப்பு

## செயற்பாடு 7

**சோடிகளாக இணைவோம். கீழே உள்ள சொற்களைப் பயன்படுத்துவோம். பேருந்து நிலையத்தில் இடம்பெறும் உரையாடல் ஒன்றை உருவாக்குவோம்.**

**எத்தனை மணிக்கு, எந்தப் பேருந்தில், எங்கே, கட்டணம், எவ்வளவு, பயணச்சீட்டு, என்ன.**

## செயற்பாடு 8

**பின்வரும் நகரங்களின் பெயர்களை வாசிப்போம். இலங்கைப் படத்தில் குறிப்பிடுவோம்.**

**யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, திருகோணமலை, கண்டி, நீர்கொழும்பு, காலி, சிலாபம்**



## செயற்பாடு 9

**பின்வரும் திசைகளை வாசிப்போம். கலந்துரையாடுவோம். பொருத்தமான சிங்களச் சொற்களுடன் இணைப்போம்.**




| | |
|---|---|
| 1. திசை | ඊසාන |
| 2. வடக்கு | බස්නාහිර |
| 3. கிழக்கு | දිශාව |
| 4. தெற்கு | නැගෙනහිර |
| 5. மேற்கு | දකුණ |
| 6. வடகிழக்கு | උතුර |
| 7. தென்கிழக்கு | නිරිත දිග |
| 8. வடமேற்கு | වයඹ |
| 9. தென்மேற்கு | ගිනිකොන |

## செயற்பாடு 10

**வினாக்களைக் கேட்போம். விடையளிப்போம்.**

| |
|---|
| **யாழ்ப்பாணம், மாத்தறை, கொழும்பு, மட்டக்களப்பு, மன்னார்** |

*உதாரணம்*

1. *யாழ்ப்பாணம் எந்தத் திசையில் உள்ளது?*

   *யாழ்ப்பாணம் வடக்குத் திசையில் உள்ளது.*

2. *மட்டக்களப்பு எந்தத் திசையில் உள்ளது?*

   ________________________

3. ________________________ ?

   ________________________

4. ________________________ ?

   ________________________

5. ________________________ ?

   ________________________

# செவிமடுப்போம் உச்சரிப்போம்



24



நேர அட்டவணை

ஏறுவோம்

கவனமாக

பஸ் நிலையம்

பயணச் சீட்டு

யாழ்ப்பாணம்

கிழக்கு

மேற்கு

தெற்கு



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. ලංකාවේ නගරවල නම් දෙමළ බසින් හඳුනා ගැනීම හා කීම | | | |
| 2. දිශා දෙමළ බසින් කීම | | | |
| 3. ‘‘க்கு’’ ප්‍රත්‍ය සුදුසු ලෙස භාවිත කිරීම | | | |
| 4. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී නිවැරදි ව තේරුම් ගැනීම | | | |

# 9 முயன்றால் வெல்லலாம்

## செயற்பாடு 1 (25)

**படங்களை அவதானிப்போம். கலந்துரையாடுவோம். ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம். கதையை வாசிப்போம்.**



ஒரு நரி பசியால் அலைந்தது. எங்கும் உணவு தேடியது. கிடைக்கவில்லை. வழியில் ஒரு திராட்சைத் தோட்டத்தைக் கண்டது. திராட்சைப்பழம் சாப்பிட நினைத்தது.



எட்டிஎட்டிப் பறிக்கப் பார்த்தது. எட்டவில்லை. சீச்சி இந்தப் பழம் புளிக்கும், வேண்டாம் என்றது. தோட்டத்தை விட்டு வெளியே சென்றது. அப்போது மான் ஒன்று அங்கே வந்தது.



‘‘என்ன நரியாரே என்ன புளிக்கும்’’ என்று கேட்டது. ‘‘திராட்சைப் பழத்தைப் பறிக்கப் பார்த்தேன். எட்ட வில்லை’’ என்றது. மான் சிரித்தது. ‘‘முயற்சி செய்யாமல் இப்படிச் சொல்லலாமா?’’ என்று மான் கேட்டது.



‘‘நரியாரே வாருங்கள், அந்த மரக்குற்றியை உருட்டுவோம்’’ என்றது. நரியும் மானும் சேர்ந்து மரக்குற்றியை உருட்டின.



நரி மரக்குற்றியில் ஏறிப் பழத்தைப் பறித்தது. மானுக்கும் கொடுத்தது.



மானும் நரியும் திராட்சைப் பழங்களைச் சாப்பிட்டன. மகிழ்ச்சியுடன் சென்றன.

## சொல்அறிமுகம்

| | | |
|---|---|---|
| பசியால் | - | බඩගින්නෙන් |
| அலைந்தது | - | එහෙ මෙහේ ඇවිද්දා |
| கிடைக்கவில்லை | - | ලැබුණේ නෑ |
| திராட்சை | - | මිදි |
| நினைத்தது | - | සිතුවේ ය |
| கவலை | - | දුක |
| முயற்சி | - | උත්සාහය |
| செய்யாமல் | - | නොකර |
| மரக்குற்றி | - | ගසක කොටයක් |
| மகிழ்ச்சி | - | සතුට |
| உருட்டின | - | පෙරළුවෝ ය |
| பறிக்க | - | කඩන්න |

## செயற்பாடு 2 (25)

**கதையை செவிமடுப்போம். சரியான விடையின் கீழ்க் கோடிடுவோம். எழுதுவோம்.**

1) பசியால் அலைந்த மிருகம்.

i. நரி ii. மான் iii. புலி

2) நரி வழியில் ________________ தோட்டத்தைக் கண்டது.

i. திராட்சை ii. வாழை iii. தென்னை

3) நரியின் முன்னால் வந்த மிருகம்.

i. குதிரை ii. நரி iii. மான்

4) நரியும் மானும் ________________ உருட்டின.

i. மரக்குற்றியை ii. பந்தை iii. திராட்சையை

5) திராட்சைப் பழங்களைச் சாப்பிட்டு மகிழ்ந்த மிருகங்கள் எவை ?

i. புலியும் மானும்

ii. நரியும் மானும்

iii. குதிரையும் நரியும்

## செயற்பாடு 3

**குழுக்களாக இணைவோம். வாக்கியங்களை வாசிப்போம். பொருத்தமான படத்தைத் தெரிவு செய்வோம். இலக்கமிடுவோம்.**



| | |
|---|---|
| 1 | ஒரு நரி பசியால் அலைந்தது. வழியில் ஒரு திராட்சைத் தோட்டத்தைக் கண்டது. |
| 2 | எட்டிப் பறிக்க நினைத்தது ஆனால் பறிக்க முடியவில்லை. |
| 3 | அப்போது மான் ஒன்று வந்தது. |
| 4 | நரியும் மானும் மரக்குற்றியை உருட்டின. |
| 5 | நரி, மரக் குற்றியில் ஏறி பழத்தைப் பறித்தது. |
| 6 | மானும் நரியும் திராட்சைப் பழங்களை மகிழ்ச்சியுடன் உண்டன. |

## செயற்பாடு 4

**பின்வரும் ஒத்த கருத்துச் சொற்களை வாசிப்போம்.**

1. உணவு - சாப்பாடு, ஆகாரம்
2. பழம் - கனி
3. வழி - வீதி, பாதை
4. மகிழ்ச்சி - சந்தோசம்
5. அலைந்தது - திரிந்தது
6. சென்றது - போனது

## செயற்பாடு 5

**பின்வரும் வாக்கியங்களை சிங்களத்தில் எழுதுவோம்.**

1. ஒரு நரி பசியால் அலைந்தது.

_______________________

2. இந்தக் கனி புளிக்கும் என்றது.

_______________________

3. மானும் நரியும் திராட்சைப்பழங்களைச் சாப்பிட்டன.

_______________________

## செயற்பாடு 6

**படங்களை அவதானிப்போம். கலந்துரையாடுவோம். வாசிப்போம்.**

### சுவைகள்



உறைப்பு



துவர்ப்பு



புளிப்பு



இனிப்பு



உவர்ப்பு



கசப்பு

## செயற்பாடு 7

**பின்வரும் கூற்றுக்கள் சரியாயின் (✓) எனவும் பிழையாயின் (×) எனவும் அடையாளம் இடுவோம்.**

1. சீனி இனிக்கும்.
2. மாங்காய் உறைக்கும்.
3. திராட்சைப்பழம் துவர்க்கும்.
4. கடல் நீர் உவர்க்கும்.
5. வேப்பிலை கசக்கும்.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



26

முயன்றால்

வழியில்

புளிக்கும்

திராட்சை

பறிக்க

வெளியே

மகிழ்ச்சி

முயற்சி

மரக்குற்றி



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. කතාවක් කියවා තේරුම් ගැනීම | | | |
| 2. ආහාරවල විවිධ රස හඳුනාගැනීම | | | |
| 3. සමාන පද කියවා දැන ගැනීම | | | |
| 4. මෙම පාඩමේ යෙදෙන වචන සවන් දී නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 10 நோன்புப் பெருநாள்

## செயற்பாடு 1

**படங்களைப் பார்ப்போம். கலந்துரையாடுவோம்.**













## செயற்பாடு 2 (27)

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம். வாசிப்போம்.**

அரபு மாதத்தில் ஒன்பதாவது மாதம் ரமழான் மாதம். இஸ்லாமியர்கள் ரமழான் மாதத்தில் தலைப்பிறை கண்டதும் நோன்பு தொடங்குவார்கள். அடுத்த மாதம் தலைப்பிறை பார்த்து நோன்பை முடிப்பார்கள். பெருநாள் கொண்டாடுவதன் நோக்கம், ஏழைகளின் துன்பங்களை உணர்வதும், அவர்களுக்கு உதவுவதும் ஆகும். பெருநாள் அன்று அதிகாலையில் எழுவார்கள். நீராடிப் புத்தாடை அணிவார்கள். பள்ளிவாசலுக்குச் செல்வார்கள்.



வட்டலப்பம், தொதல், பூந்தி போன்ற இனிப்புப் பலகாரங்கள் செய்வார்கள், நண்பர்கள், உறவினர் வீடுகளுக்குப் பலகாரங்கள் பரிமாறுவார்கள். எல்லோரும் சேர்ந்து ஒரே தட்டில் உணவு உண்பார்கள். அது சஹன் சாப்பாடு எனப்படும். சஹன் சாப்பாடு அவர்களின் ஒற்றுமைக்கு அடையாளம் ஆகும்.

## சொல்அறிமுகம்

| | | |
|---|---|---|
| பெருநாள் | - | උත්සවය |
| அரபு மாதம் | - | අරාබි මාසය |
| தலைப்பிறை | - | (පුර අටවක සඳ) අඩසඳ |
| நோன்பு | - | නෝම්බි / උපවාසය |
| நோக்கம் | - | අරමුණ |
| புத்தாடை | - | අලුත් ඇඳුම් |
| ஒற்றுமை | - | එකමුතුකම / සමගිය |
| அடையாளம் | - | සංකේතය |

## செயற்பாடு 3 (27)

**செவிமடுப்போம். சரி (✓) பிழை (✗) இடுவோம்.**

1. முஸ்லிம்கள் ரமழான் மாதம் தலைப்பிறையைக் கண்டு நோன்பு இருப்பார்கள்.
2. அரபு மாதங்களில் கடைசி மாதமே ரமழான் மாதம் ஆகும்.
3. ‘சஹன்’ சாப்பாடு ஒற்றுமையின் அடையாளம் ஆகும்.

## செயற்பாடு 4

**சரியான விடையைத் தெரிவு செய்வோம். அதன் கீழ்க் கோடிடுவோம்.**

1. முஸ்லிம்களின் இறைவணக்கம்.

   (அ) ஆராதனை (ஆ) தொழுகை (இ) வழிபாடு

2. முஸ்லிம் மக்கள் பெருநாள் தினத்தில் அதிகாலையில் செல்லும் இடம்.

   (அ) கோயில் (ஆ) தேவாலயம் (இ) பள்ளிவாசல்

3. நோன்பு ஆரம்பிக்கும்போது முக்கியமாக முதலில் பார்ப்பது.

   (அ)பௌர்ணமியை (ஆ)தலைப்பிறையை (இ)அமாவாசையை

## செயற்பாடு 5

**விடை எழுதுவோம்.**

1. எந்த மாதத்தில் நோன்புப் பெருநாள் வரும்?

_______________________

2. நோன்புப் பெருநாளை கொண்டாடுவதன் நோக்கம் யாது?

_______________________

3. இந்தப் பெருநாளில் தயாரிக்கப்படும் விசேடமான இனிப்புப் பண்டங்கள் இரண்டு தருக.

_______________________

## செயற்பாடு 6

**குழுவாகக் கலந்துரையாடுவோம். விடை எழுதுவோம்.**

நோன்புப் பெருநாள் அன்று முஸ்லிம்கள் என்னென்ன செய்வார்கள்? ஒழுங்கில் கூறுவோம். வாக்கியங்களாக எழுதுவோம். வாசிப்போம்.

1. ________________________________
2. ________________________________
3. ________________________________
4. ________________________________
5. ________________________________
6. ________________________________
7. ________________________________

## செயற்பாடு 7

விரும்பிய பண்டிகை ஒன்றைப் பற்றி குழுவாகக் கலந்துரையாடுவோம். ஒரு பந்தியாக எழுதுவோம். வகுப்பறையில் முன்வைப்போம்.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



28

ரமழான்

தலைப்பிறை

பள்ளிவாசல்

உறவினர்

ஒற்றுமை

அடையாளம்

நோன்பு

பலகாரங்கள்



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. 'රමළාන්' උත්සවය ගැන දැනගැනීම | | | |
| 2. 'රමළාන්' උත්සවය පිළිබඳව වාක්‍ය ලිවීම | | | |
| 3. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී නිවැරදි ව උච්චාරණය කිරීම. | | | |

# 11 குருவும் சீடர்களும்

**செயற்பாடு 1**

**படத்தைப் பார்ப்போம். குழுவாகக் கலந்துரையாடுவோம். வகுப்பறையில் முன்வைப்போம்.**


















## செயற்பாடு 2

**பின்வரும் வினாக்களுக்கு சரியாக விடை எழுதுவோம்.**

1. குருவுடன் எத்தனை பேர் நிற்கிறார்கள்?
2. படத்தில் இருக்கும் விலங்குகளின் பெயர்களைத் தருக.
3. நிலத்தில் விழுந்து உடைந்த பொருள் எது?
4. பற்றைக்குள் இருந்து ஓடியது எது?

## செயற்பாடு 3

29

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம். வாசிப்போம்.**

ஓர் ஊரில் பரமார்த்த குரு ஒருவர் இருந்தார். அவருக்கு ஐந்து சீடர்கள் இருந்தனர். குருவும் சீடர்களும் அன்பாக மடத்தில் வாழ்ந்தார்கள்.

அவர்கள் ஊர் ஊராகச் செல்வார்கள். குரு மக்களுக்கு ஆசி வழங்குவார். மக்கள் அவர்களுக்குக் காணிக்கை வழங்குவார்கள்.

குருவிற்கு வயதாகிவிட்டது. நீண்ட தூரம் நடக்க முடியவில்லை. குருவிற்கு குதிரை வாங்கும் ஆசை வந்தது. அதனால் சீடர்கள் குருவுக்குக் குதிரை வாங்கப் புறபட்டார்கள்.

போகும் வழியில் ஒரு தோட்டத்தில் ஒரு கழுதை இருந்தது. அங்கே பூசணிக்காய்களும் இருந்தன. கழுதையைக் குதிரை எனவும் பூசணிக்காயைக் குதிரை முட்டை எனவும் நினைத்தார்கள்.

உடனே சீடர்கள் தோட்டக்காரனிடம் சென்றார்கள். குதிரை முட்டையின் விலையைக் கேட்டார்கள். குருவிடம் பணம் வாங்கி வந்தார்கள்.

சீடர்கள் தோட்டக்காரனிடம் பணத்தைக் கொடுத்து முட்டையை வாங்கினார்கள். தோட்டக்காரன் சீடர்களின் முட்டாள்தனத்தை நினைத்துச் சிரித்தான்.

சீடர்கள் முட்டையைக் கொண்டு செல்லும் வழியில் முட்டை கீழே விழுந்தது. பெரிய சத்தத்துடன் உடைந்தது. அந்தச் சத்தத்தைக் கேட்ட ஒரு முயல் புதருக்குள் இருந்து துள்ளி ஓடியது. சீடர்கள் அதைக் குதிரைக்குட்டி என நினைத்தார்கள். நடந்ததை குருவிடம் கூறினார்கள்.

குரு சீடர்களைப் பார்த்து ‘‘சீடர்களே! குதிரை குட்டியாக இருக்கும்போதே இவ்வளவு வேகமாக ஓடுகிறது. அதில் நான் பயணம் செய்தால் என்னை விழுத்திவிடும் அதனால் குதிரைக் குட்டி வேண்டாம்’’ என்றார்.

## சொல்அறிமுகம்

| | | |
|---|---|---|
| சீடர்கள் | - | ගෝලයෝ |
| பூசணிக்காய் | - | වට්ටක්කා |
| மடம் | - | මඩම |
| காணிக்கை | - | පඬුරු |
| புதர் | - | පඳුර |
| வேகம் | - | වේගය |
| ஆசி | - | ආශීර්වාදය |
| குதிரை | - | අශ්වයා |
| முட்டை | - | බිත්තරය |
| விலங்குகள் | - | සත්තු |

## செயற்பாடு 4 (29)

**மீண்டும் கதையைச் செவிமடுத்து பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுவோம்.**

1. குருவின் பெயர் என்ன?
2. குருவிற்கு எத்தனை சீடர்கள் இருந்தனர்?
3. சீடர்கள் குதிரை முட்டை என எதை நினைத்தார்கள்?
4. ஏன் முயல் ஓடியது?

## செயற்பாடு 5

**பின்வரும் சொற்களைப் பொருத்தமாகத் தொடர்புபடுத்துவோம்.**

| | |
|---|---|
| ஆசி | பணம் |
| ஊர் | ஆசிரியர் |
| காசு | கிராமம் |
| வழி | வாழ்த்து |
| குரு | பாதை |

## செயற்பாடு 6

**பின்வரும் சொற்களை உரத்து வாசிப்போம்.**

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| (நான்) | = | நினைத்தேன் | (நினை | + | த்த் | + | ஏன்) |
| (நாங்கள்) | = | நினைத்தோம் | (நினை | + | த்த் | + | ஓம்) |
| (நீ) | = | நினைத்தாய் | (நினை | + | த்த் | + | ஆய்) |
| (நீங்கள்) | = | நினைத்தீர்கள் | (நினை | + | த்த் | + | ஈர்கள்) |
| (அவன்) | = | நினைத்தான் | (நினை | + | த்த் | + | ஆன்) |
| (அவள்) | = | நினைத்தாள் | (நினை | + | த்த் | + | ஆள்) |
| (அவர்) | = | நினைத்தார் | (நினை | + | த்த் | + | ஆர்) |
| (அவர்கள்) | = | நினைத்தார்கள் | (நினை | + | த்த் | + | ஆர்கள்) |

## செயற்பாடு 7

**பின்வரும் சொற்களுக்குப் பொருத்தமான முடிக்கும் சொல்லைக் கொண்டு இடைவெளி நிரப்புவோம்.**

நான் வாசித்தேன்

நாங்கள் __________

நீ __________

நீங்கள் __________

அவன் __________

அவள் __________

அவர் __________

அவர்கள் __________

## செயற்பாடு 8

**கதையில் வருகின்ற இறந்தகால வினைச் சொற்களைக் கோடிடுவோம். அவற்றை அட்டவணைப்படுத்துவோம்.**

உ+ம் :-

| நினைத்தான் (த்த்) | இருந்தான் (ந்த) |
|---|---|
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |

## செயற்பாடு 9

**சொல்லை எழுதுவோம்.**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| நான் | இரு | + | ந் த் | + | ஏன் | = | இருந்தேன் |
| நாங்கள் | இரு | + | ந் த் | + | ஓம் | = | |
| நீ | இரு | + | ந் த் | + | ஆய் | = | |
| நீங்கள் | இரு | + | ந் த் | + | ஈர்கள் | = | |
| அவன் | இரு | + | ந் த் | + | ஆன் | = | |
| அவள் | இரு | + | ந் த் | + | ஆள் | = | |
| அவர் | இரு | + | ந் த் | + | ஆர் | = | |
| அவர்கள் | இரு | + | ந் த் | + | ஆர்கள் | = | |

## செயற்பாடு 10

**தரப்பட்டுள்ள சொற்களுக்குப் பொருத்தமான முடிக்கும் சொல்லை எழுதுவோம்.**

(உ + ம்) - வாழ் நான் - வாழ்ந்தேன்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அவன் | - | __________ | நாங்கள் | - | __________ |
| அவள் | - | __________ | நீ | - | __________ |
| அவர்கள் | - | __________ | நீங்கள் | - | __________ |

## செயற்பாடு 11

A இல் உள்ள ஒரு சொல்லை ஒருவர் கூற B இல் உள்ள வினைச் சொல்லை இன்னொருவர் கூறவேண்டும். மூன்றாமவர் அவை இரண்டையும் வைத்து இறந்த காலத்தில் வாக்கியமாகக் கூறவேண்டும்.

உதாரணம் A - நான்

B - படி

C - நான் படித்தேன்.

| A | B | C |
|---|---|---|
| நாங்கள் | வாழ் | __________ |
| நீ | இரு | __________ |
| நீங்கள் | சிரி | __________ |
| அவன் | உண் | __________ |
| அவள் | எடு | __________ |
| அவர்கள் | பாடு | __________ |

## செயற்பாடு 12

**பின்வரும் சொற்களைக் கொண்டு சிறு வாக்கியங்கள் அமைப்போம்.**

**ஓடியது, வந்தது, கண்டது, பார்த்தது, இருந்தன**

1. ______________________________

2. ______________________________

3. ______________________________

4. ______________________________

5. ______________________________



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



30

குதிரை

காணிக்கை

பூசனிக்காய்

விழுந்து

பற்றை

கழுதை

நல்லது

குதிரைக் குட்டி

சீடர்கள்



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. කතන්දරයකට සවන් දී රස විඳීම | | | |
| 2. අතීත කාල ක්‍රියා පද ගොඩනැඟීම හා හඳුනාගැනීම | | | |
| 3. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 12 பட்டம் விடுவோம்

## செயற்பாடு 1

**கீழே தரப்பட்டுள்ள படங்களை அவதானிப்போம். கலந்துரையாடுவோம். இடைவெளிகளை நிரப்புவோம்.**



1. ________________



2. ________________



3. ________________



4. ________________



5. ________________



6. ________________

**மீன் பட்டம், சிவப்புப் பட்டம், பருந்துப் பட்டம், மயில் பட்டம், எட்டுமூலைப் பட்டம், வண்ணாத்திப் பூச்சிப் பட்டம்**

1. இந்தப் பட்டங்களில் உங்களுக்கு பிடித்த பட்டம் எது?

________________

## செயற்பாடு 2

**படத்தை அவதானிப்போம் கலந்துரையாடுவோம்.**



## செயற்பாடு 3

31

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம். வாசிப்போம். விடையளிப்போம்.**

*யாழ்ப்பாணத்தில் அழகிய கடற்கரை ஒன்று உண்டு. அங்கே ஒவ்வொரு வருடமும் பொங்கல் பண்டிகைக்காக மாபெரும் பட்டம் விடும் போட்டி நடைபெறும்.*

*பட்டம் கட்டுவது ஒரு கலை. வண்ண வண்ணப் பட்டங்களைக் கட்டுவார்கள். போட்டியின்போது வானில் பறக்க விடுவார்கள். எட்டு மூலைப் பட்டம், கொக்குப் பட்டம், பெட்டிப் பட்டம், மயில்ப் பட்டம் போன்ற பலவித உருவங்களில் பட்டப் போட்டிக்கு பட்டம் செய்து பறக்கவிடுவார்கள். இது நல்லதொரு பொழுதுபோக்கு, அது மட்டுமல்ல கலையம்சம் நிறைந்த போட்டியும் ஆகும்.*

அண்மையில் பட்டம்விடும் போட்டி ஒன்று நடைபெற்றது. போட்டித் தினத்தன்று சிவப்பு, நீலம், பச்சை, மஞ்சள், ஊதா எனப் பல வண்ணங்களில் 67க்கு மேற்பட்ட பட்டங்கள் வானில் பறந்தன. இவற்றுள் 20 பட்டங்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன.

## சொல்அறிமுகம்

| | | |
|---|---|---|
| மாபெரும் | - | විශාල (උත්කර්ෂවත්) |
| பட்டப் போட்டி | - | සරුංගල් තරග |
| ஒரு கலை | - | කලාවක් |
| உருவங்கள் | - | රූප/හැඩ |
| பறக்க விடுவார்கள் | - | යවයි |
| கலையம்சம் | - | කලාත්මක භාවය |
| தினத்தன்று | - | දිනයේ දී |
| மேற்பட்ட | - | අධික |

## செயற்பாடு 4

31

**சரியாயின் "✓" எனவும் பிழையாயின் "×" எனவும் அடையாளமிடுவோம்.**

1. பட்டம் விடும் போட்டி யாழ்ப்பாண கடற்கரையில் நடைபெற்றது.
2. தீபாவளிப் பண்டிகையை முன்னிட்டுப் பட்டம் விடும் போட்டிகள் நடைபெற்றன.
3. 67க்கு மேற்பட்ட பட்டங்கள் வானில் பறந்தன.
4. 30 பட்டங்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.

## செயற்பாடு 5

**குழுவாக இணைவோம். கலந்துரையாடுவோம். கூற்றுக்குப் பொருத்தமான படத்தின் இலக்கத்தை கூட்டுக்குள் இடுவோம்.**

1. 
2. 
3. 
4. 
5. 
6. 

| | |
|---|---|
| நிறக் கடதாசிகளை ஒட்டுங்கள். | ☐ |
| பசையைப் பூசுங்கள். | ☐ |
| ஈர்க்குகளை அளவாக வெட்டுங்கள். | ☐ |
| வடிவத்தை ஒழுங்குபடுத்துங்கள். | ☐ |
| பட்டத்தின் முனையில் வாலை ஒட்டுங்கள். | ☐ |
| நூலால் இறுக்கிக் கட்டுங்கள். | ☐ |

7. 

பட்டத்தை அலங்கரிக்கப் பூக்களை ஒட்டுங்கள்.

## செயற்பாடு 6

32

**ஆசிரியரின் உதவியுடன் செவிமடுப்போம். விடையளிப்போம்.**



■ மாமா ▲ விஷ்ணு

▲ **மாமா ... மாமா**
**அங்கே ... பட்டம்**

**பட்டம் விடுவோம்**
**பட்டம் விடுவோம்**
**பாலா ஓடி வா ...**
**பாடிப் பாடிப் பட்டம் விடுவோம்**
**பாலா ஓடி வா ...**

■ மேலே மேலே பறக்குது.

▲ மாமா .. பட்டம் எப்படி மேலே பறக்குது?

■ காற்றின் உதவியால் மேலே பறக்குது.

▲ பட்டம் எங்கே முதன் முதலாகச் செய்யப்பட்டது?

■ சீன நாட்டில் இரண்டாயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் செய்யப்பட்டது.

▲ என்ன?... அவ்வளவு பழைமையான வரலாறா?

■ ஓ...

▲ எனக்குத் தேவையான பட்டங்களை நானே செய்து பறக்க விடுவேன். மாமா.

■ அப்படியா...? பட்டம் பறக்கவிட்ட எல்லோரும் விமானப் பொறியியலாளர்கள்தான்.

▲ உண்மையா... மாமா?

■ ஓ ... ரைட் சகோதரர்கள் விமானம் செய்வதற்கு முன் பட்டம் செய்து பறக்க விட்டார்களாம். பறத்தல் தொடர்பான சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டார்களாம்.

▲ பட்டம் தொடர்பான பல விடயங்களை அறிந்து கொண்டேன், நன்றி மாமா.

■ சந்தேகங்கள் தீர்ந்ததா?

▲ ஓ... மாமா, நான் பட்டம் விடப் போகிறேன். மிக்க நன்றி மாமா.

■ நல்லது.

## சொல்அறிமுகம்

| | |
|---|---|
| உதவியால் | - ආධාරයෙන් |
| இரண்டாயிரத்து எண்ணூறு | - 2800 |
| பழைமையான | - පැරණි |
| வரலாறு | - ඉතිහාසය |
| பொறியியலாளர்கள் | - ඉංජිනේරුවෝ |
| சந்தேகங்கள் | - සැක |
| தீர்த்துக் கொண்டனர் | - නිරාකරණය කර ගත්තෝ ය. |
| விடயங்கள் | - කරුණු |

## செயற்பாடு 7 (32)

**பின்வரும் வினாக்களுக்கு விடையளிப்போம். செவிமடுப்போம்.**

1. பட்டம் எப்படி மேலே பறக்கிறது?

___

2. பட்டங்கள் எங்கே முதன் முதல் செய்யப்பட்டன?

___

3. எத்தனை ஆண்டுகளுக்கு முன் பட்டம் செய்யப்பட்டது?

___

4. இங்கு குறிப்பிடப்படும் விமானம் செய்யும் சகோதரர்களின் பெயர் என்ன?

___

## செயற்பாடு 8

உரையாடலை இருவர் இருவராக பாத்திரமேற்று, வாசிப்போம்.

## செயற்பாடு 9

**குழுக்களாக இணைவோம். பட்டம் செய்வோம். செய்த பட்டங்களை பின்வரும் சொற்களைப் பயன்படுத்தி வகுப்பில் முன்வைப்போம்.**

| | | |
|---|---|---|
| நிறம் | - | சிவப்பு, நீலம், பச்சை, வெள்ளை, கபிலம், மஞ்சள் ஊதா, சாம்பல், வெள்ளை, கறுப்பு, செம்மஞ்சள். |
| வடிவம் | - | வட்டம், சதுரம், முக்கோணம், கொக்கு, மயில் பெரிய, சிறிய, அழகான. |

வகுப்பில் செய்யப்பட்ட அழகான பட்டத்தினைத் தெரிவு செய்வோம்.

## செயற்பாடு 10

**குழுக்களாக இணைவோம். சொற்களைக் கண்டுபிடிப்போம். எழுதுவோம்.**

வி ச் யி ளா ப கு
சை
ல் சி றி மா ங்
பு
க ய ட
ம் ம் வ ர க் ச ட்
ப் து கொ ம்
ன் னி ல் ம
பொ

1. சிவப்பு
2. ____________
3. ____________
4. ____________
5. ____________
6. ____________

## செயற்பாடு 11

குழுவாக இணைவோம். பட்டம் தொடர்பாக நான்கு வரிகளைக் கொண்ட பாடல் எழுதுவோம். வகுப்பறையில் முன்வைப்போம். பாடுவோம்.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



33

கடற்கரை

அழகிய

பொழுதுபோக்கு

தினத்தன்று

இவற்றுள்

கலையம்சம்

வழங்கினார்

உருவங்கள்

வரலாறு



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. සරුංගල් වර්ග පිළිබඳ ව කීම | | | |
| 2. යාපනයේ ඇති සරුංගල් උත්සවය පිළිබඳ ව අවබෝධ කර ගැනීම | | | |
| 3. සරුංගලයක් සාදන ක්‍රමය දෙමළ භාෂාවෙන් සවන් දී සරුංගලයක් සෑදීම | | | |
| 4. සරුංගල් පිළිබඳ ව ඉතිහාසය දැනගැනීම | | | |
| 5. තමා සෑදූ සරුංගලයක් පිළිබඳ ව විස්තර කිරීම | | | |
| 6. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 13 பாடசாலையில் முதல் நாள்

## செயற்பாடு 1

**படத்தை அவதானிப்போம். கீழ்வரும் சொற்களை வாசிப்போம். கலந்துரையாடுவோம்.**



| | | |
|---|---|---|
| முதல்நாள் | வகுப்பாசிரியர் | தேசிய கீதம் |
| சீருடை | புதிய மாணவர்கள் | மணி ஒலித்தது |
| ஆயத்தம் | வரவேற்பு | புன்சிரிப்பு |
| அறிவுரைகள் | விளையாட்டு | |
| வித விதமான உணவுகள் | | |

## செயற்பாடு 2 34

**ஆசிரியரின் உதவியுடன் கீழ்வரும் உரைப்பகுதியை அவதானமாகச் செவிமடுப்போம். வாசிப்போம்.**

அன்று திங்கட்கிழமை. அம்மா என்னை எழுப்பினார். நான் மகிழ்ச்சியுடன் எழுந்தேன். பல் துலக்கி, முகம் கழுவினேன். பாடசாலைச் சீருடையை அணிந்தேன். இறைவனை வணங்கினேன். அம்மாவும் அப்பாவும் என்னை வாரி அணைத்து முத்தமிட்டார்கள். நான் மகிழ்ச்சி அடைந்தேன். அப்பாவும் அம்மாவும் என்னை பாடசாலைக்கு அழைத்துச் சென்றார்கள்.



நாங்கள் பாடசாலையை அடைந்தோம். பாடசாலை மிக அழகாக அலங்கரிக்கப்பட்டு இருந்தது. என்னைப் போன்று பல மாணவர்கள் தமது பெற்றோருடன் வந்து இருந்தார்கள். சற்று நேரத்தில் தரம் 1 மாணவர்களை வரவேற்கும் விழா ஆரம்பமானது. தரம் 2 மாணவர்கள் அழகிய ரோஜா மலர்களை எங்களுக்கு வழங்கினார்கள்.

வரிசையாக எங்களை மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார்கள். எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. தரம் 2 மாணவர்கள் அழகாக நடனம் ஆடினார்கள். எங்களுக்கு பல வகையான உணவுகள் வழங்கினார்கள். அனைவரும் மகிழ்ச்சியாக உண்டோம்.

வகுப்பாசிரியர் எங்களை புன்சிரிப்போடு வரவேற்றார். வணக்கம் கூறினார். அன்புடன் பேசினார். எங்களை மைதானத்திற்கு அழைத்துச் சென்றார்.

புதிய நண்பர்களுடன் சேர்ந்து விளையாடினோம். 11.30 மணியளவில் மணி ஒலித்தது. எல்லோரும் தேசிய கீதம் பாடினார்கள். நாங்கள் வரிசையாக வெளியேறினோம். அம்மா ஓடிவந்து என்னைத் தூக்கிக் கொண்டார். நாங்கள் வீட்டுக்கு சென்றோம். அன்றைய நாளை என்னால் மறக்க முடியாது.

## சொல்அறிமுகம்

| | |
|---|---|
| அதிகாலை | - පාන්දරින්/ හිමිදිරියේ |
| வணங்கினேன் | - වැන්දෙමි |
| முத்தம் | - හාදුව |
| ஆயத்தமானேன் | - සූදානම් වුණෙමි |
| வரவேற்றார் | - පිළිගත්තේ ය |
| செவிமடுத்தோம் | - සවන් දුන්නෙමු |
| கூறினார் | - පැවසුවේ ය |
| சென்றோம் | - ගියෙමු |
| சாப்பிட்டோம் | - කෑවෙමු |

## செயற்பாடு 3 (34)

**மீண்டும் செவிமடுப்போம். சரி (✓) பிழை (✗) இடுவோம்.**

1. அம்மா என்னை எழுப்பினார்.
2. அப்பா என்னைப் பாடசாலைக்கு அழைத்துச் சென்றார்.
3. அதிபர் எங்களுக்கு அறிவுரை வழங்கினார்.
4. ஆசிரியர் வணக்கம் கூறினார்.
5. விளையாட்டு மைதானத்தில் சாப்பிட்டோம்.

## செயற்பாடு 4

**படங்களுக்கு பொருத்தமான வாக்கியங்களை இனங்காண் போம். கூட்டினுள் எழுத்தை எழுதுவோம்.**

அ



ஆ



இ



ஈ



1. நான் பல் துலக்கினேன். ☐
2. நான் பாடசாலை செல்ல ஆயத்தம் ஆனேன். ☐
3. நான் படுக்கையிலிருந்து எழும்பினேன். ☐
4. நான் முகம் கழுவினேன். ☐

## செயற்பாடு 5

**வாக்கியங்களை ஒழுங்குபடுத்துவோம். எழுதுவோம்.**

| | |
|---|---|
| 1 | பாடசாலைச் சீருடை அணிந்தேன். |
| 2 | பல் துலக்கி, முகம் கழுவினேன். |
| 3 | அம்மா என்னை எழுப்பினார். |
| 4 | பாடசாலைக்குச் செல்ல ஆயத்தம் ஆனேன். |
| 5 | இறைவனை வணங்கினேன். |
| 6 | பெற்றோரை வணங்கினேன். |
| 7 | அன்று ஒரு திங்கட்கிழமை. |

## செயற்பாடு 6

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுவோம்.**

1. பாடசாலைக்கு அழைத்துச் சென்றவர்கள் யாவர்?
2. தரம் 1 மாணவர்களை வரவேற்க வழங்கிய பூ எது?
3. வகுப்பாசிரியர் விளையாட எங்கே அழைத்துச் சென்றார்?
4. எத்தனை மணிக்கு மணி ஒலித்தது?

## செயற்பாடு 7

**கீழ்வரும் வாக்கியங்களை வாசிப்போம். ஒழுங்குபடுத்துவோம்.**

1. நாங்கள் அதில் பயணம் செய்தோம்.
2. கடைக்குச் சென்று புத்தகப்பை வாங்கினோம்.
3. ஒரு முச்சக்கரவண்டி வந்தது.
4. அன்று விடுமுறை நாள்.
5. நான் மாமாவுடன் கடைக்குப் போக ஆயத்தம் ஆனேன்.
6. நாங்கள் வீட்டுக்குத் திரும்பினோம்.
7. நீண்ட நேரம் பஸ் வரவில்லை.
8. எனக்குப் புத்தகப்பை ஒன்று வாங்க வேண்டும்.
9. பஸ் வரும்வரை காத்திருந்தோம்.

## செயற்பாடு 8

**செயற்பாடு 7 ஐ பின்வரும் சொற்களைக் கொண்டு ஒரு பந்தியாக மாற்றி எழுதுவோம்.**

| | |
|---|---|
| அப்பொழுது / அந்த நேரம் | - ඒ වෙලාවේ |
| பிறகு / பின் / பின்னர் | - පසු/ පසු ව |
| ஆகவே / எனவே / அதனால் / ஆகையால் | - එම නිසා |
| ஆனால் | - නමුත් |



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



35

வரவேற்பு

மகிழ்ச்சியுடன்

கழுவினேன்

இறைவன்

அழைத்து

ஒலித்தது

விழா

வணங்கினேன்



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. அப்பொழுது, ஆகவே, ஆனால், பிறகு වැනි නිපාත පද භාවිත කිරීම | | | |
| 2. සිද්ධියක් වචන කිහිපයකින් විස්තර කර පිළිවෙළට කියවීම, ලිවීම | | | |
| 3. වචනවලින් ලියූ සිද්ධියක් ඡේදයක් වශයෙන් ලියා ගැනීම | | | |
| 4. මෙම පාඩමේ යෙදෙන වචන සවන් දී නිවැරදි ව උච්චාරණය කිරීම | | | |

# 14 சிறுவர் தினம்

**செயற்பாடு 1**

**குழுவாக இணைவோம். பத்திரிகைச் செய்தியை அவதானிப்போம். கலந்துரையாடுவோம். வாசிப்போம்.**

தினகரன்

**இன்றைய சிறுவர்களே**
**நாளைய தலைவர்கள்**
**-கண்டி வலயக் கல்விப் பணிப்பாளர்.**



''இன்றைய சிறுவர்களே நாளைய தலைவர்கள். இவர்களின் எதிர்காலத்தைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டும்.'' என வலயக் கல்விப் பணிப்பாளர் தெரிவித்தார்.

கடந்த அக்டோபர் முதலாம் திகதி கண்டி விக்னேஸ்வரா வித்தியாலயத்தில் சிறுவர் தின விழா நடைப்பெற்றது. விழாவின் போதே அவர் இதனைத் தெரிவித்தார்.

காலை 10.00 மணிக்கு விழா ஆரம்பமானது. அதிபர் த.ஸ்ரீதரன் தலைமையில் இவ்விழா நடைபெற்றது.

## செயற்பாடு 2

**சுருக்கமாக விடை எழுதுவோம்.**

1. இச் செய்தி எந்த விழா பற்றியது?

2. இவ்விழா எங்கு கொண்டாடப்பட்டது?

3. இவ்விழாவுக்கு தலைமை தாங்கியவர் யார்?

## செயற்பாடு 3

குழுவாக இணைவோம். எங்கள் பாடசாலையில் நடைபெற்ற சிறுவர் தின விழா பற்றி கலந்துரையாடுவோம். குழு நிலையில் முன்வைப்போம்.

## செயற்பாடு 4

**உங்கள் பாடசாலையில் நடைபெறவுள்ள சிறுவர் தின நிகழ்வுக்கு பின்வரும் அழைப்பிதழைப் பூரணப்படுத்துவோம்.**

**சிறுவர்தின விழா - 2017**

எமது பாடசாலை சிறுவர் தின விழா 1. ________________ திகதி 2. ________________ மணிக்கு 3. ________________ நடைபெறும் இவ்விழாவில் பிரதம அதிதியாக 4. ________________ கலந்து சிறப்பிப்பார். உங்கள் அனைவரையும் வருக! வருக! எனஅன்புடன் அழைக்கின்றோம்.

விழா ஏற்பாட்டுக் குழு.

## செயற்பாடு 5 (36)

**ஆசிரியரின் உதவியுடன் பின்வரும் அழைப்பிதழைச் செவிமடுப்போம். வாசிப்போம்.**

# சிறுவர் தின விழா-2017

**ம/மா/ விக்னேஷ்வராக் கல்லூரி கண்டி.**

திரு/ திருமதி/செல்வன்/ செல்வி ..................

இடம் - பிரதான மண்டபம்

திகதி - 01.10.2017

நேரம் - மு. ப 8.30

தலைமை - திரு. க. ஸ்ரீதரன் அதிபர்

**நிகழ்ச்சி நிரல்**

- மங்கல விளக்கேற்றல்.
- வரவேற்பு உரை - **பிரதி அதிபர்**
- வரவேற்பு நடனம் - **கல்லூரி மாணவர்கள்**
- சிறுவர் நாட்டின் கண்கள் - பேச்சு - **செல்வி கா.ஜனனி – தரம் 05**
- பாடல் - **தரம் 6 மாணவர்கள்**
- எமது உரிமை - நாடகம் - **தரம் 8 மாணவர்கள்**
- சிறப்பு உரை - **கல்லூரி அதிபர்**
- குழு நடனம் - **தரம் 7 மாணவர்கள்**
- விவாதம் - **தரம் 9 மாணவர்கள்**
- நன்றி உரை - **உதவி அதிபர்**

**உங்கள் அனைவரையும் வருக வருக என வரவேற்கிறோம்.**

**விழா ஏற்பாட்டுக் குழுவினர்.**

## சொல்அறிமுகம்

| | | |
|---|---|---|
| தலைவர்கள் | - | නායකයෝ |
| பணிப்பாளார் | - | අධ්‍යක්ෂ |
| தலைமையில் | - | ප්‍රධානත්වයෙන් |
| நிகழ்ச்சி நிரல் | - | වැඩසටහන් විස්තරය |
| வரவேற்பு உரை | - | පිළිගැනීමේ කතාව |
| உரிமைகள் | - | අයිතිවාසිකම් |
| கடமை | - | වගකීම |
| சுதந்திரமாக | - | නිදහසේ |
| முக்கியமானவர்கள் | - | වැදගත් පුද්ගලයින් |
| எம்மத்தியில் | - | අප අතර |

## செயற்பாடு 6

36

**விடை கூறுவோம்.**

1. விழா ஆரம்பிக்கும் நேரம் என்ன?
2. வரவேற்பு நடனம் வழங்குபவர்கள் யாவர்?
3. வரவேற்பு உரை நிகழ்த்துபவர் யார்?
4. தரம் 8 மாணவர்கள் வழங்கும் நிகழ்ச்சி எது?
5. சிறப்பு உரை நிகழ்த்துபவர் யார்?

## செயற்பாடு 7 (37)

**ஆசிரியர் உதவியுடன் பாடலைச் செவிமடுப்போம். குழுவாகப் பாடுவோம்.**

### புதிய உலகை செய்திடுவோம்

சின்னஞ் சிறிய சிறுவர் - நாம்
சிரித்துக் குலுங்கும் பூக்கள் நாம்
நாளை உலகம் மலரவே
மலர்ந்து சிரிக்கும் மலர்கள் - நாம்

தினமும் கல்வி கற்கவே
பள்ளிக்கூடம் செல்கிறோம்
கல்வி கற்கும்சாலையில்
கலைகள் பலவும் கற்கிறோம்.

உரிமை தந்து எம்மையே
உயிரைப் போல காத்திடும்
உயர்ந்த மனிதர் எம்மையே
உயர்த்தி வைத்து ரசித்திடும்

நாளை உலகம் மலருமே
நமது கையில் தவழுமே
வீறு கொண்டு எழுந்து - நாம்
புதிய உலகை செய்திடுவோம்.

## சொல்அறிமுகம்

| | |
|---|---|
| குலுங்கும் | - සෙලවෙන /සැලෙන |
| மலரவே | - පිපෙන්න |
| மலர்ந்து | - පිපී |
| தினமும் | - දිනපතා |
| கல்விகற்கும்சாலை | - පාසල |
| உயர்ந்த | - උසස් |
| வீறு | - ගාම්භීර ව |
| கலைகள் | - කලාවල් |

## செயற்பாடு 8

**சோடிகளாக இணைவோம். பாடசாலையில் ஆசிரியர் தின விழாவுக்கான நிகழ்ச்சி நிரல் ஒன்றைத் தயாரிப்போம்.**



## செயற்பாடு 9 (38)

### செவிமடுப்போம். வாசிப்போம்.


மலாலா


ஆன் பிராங்க்


குற்றாலீஸ்வரன்

சுதந்திரமாகப் பிறந்த மனிதன் சுதந்திரமாக வாழ வேண்டும். மனிதன் சுதந்திரமாக வாழ அவர்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும். இதில் சிறுவர் உரிமைகள் மிகவும் முக்கியமானவை. 18 வயதிற்கு உட்பட்ட அனைவரும் சிறுவர்கள். உலக சனத்தொகையில் 1/3 பங்கு சிறுவர்கள். சமூகத்தில் சிறுவர்கள் மிகவும் முக்கியமானவர்கள். சாதனை படைத்த சிறுவர்கள் பலர் எம்மத்தியில் உள்ளனர்.

சிறுவர் கல்வி கட்டாயமானது. சிறுவர்களை வேலைக்கு அமர்த்துவது தடைசெய்யப்பட்டுள்ளது. சிறுவர்களின் கருத்துகளுக்கும் உணர்வுகளுக்கும் மதிப்பளித்தல் எமது கடமை. உலக சிறுவர் தினம் அக்டோபர் 01 ஆம் திகதி கொண்டாடப்படுகிறது.

## செயற்பாடு 10

**இடைவெளிகளை நிரப்புவோம்.**

1. ______________ வயதிற்கு உட்பட்டவர்கள் சிறுவர்கள் எனப்படுவார்கள்.

2. உலக சனத்தொகையில் ______________ பங்கு சிறுவர்கள்.

3. சிறுவர் தினம் அக்டோபர் மாதம் ______________ கொண்டாடப்படுகிறது.

## செயற்பாடு 11

**படங்களை அவதானிப்போம். கலந்துரையாடுவோம். விருப்பமான ஒருவர் பற்றி எழுதுவோம்.**



பெயர் - மலாலா யூசப்சையி

நாடு - பாகிஸ்த்தான்

சாதனை - 2014 ஆம் ஆண்டு அமைதிக்கான நோபல் பரிசு



பெயர் - ஆன் பிராங்க்

நாடு - ஜேர்மனி

சாதனை - ஒரு இளம் பெண்ணின் நாட்குறிப்பு (1947) The Diary of a young Girl



பெயர் - குற்றாலீஸ்வரன்

நாடு - இந்தியா - தமிழ் நாடு

சாதனை - 1994 ஆங்கிலக் கால்வாயை நீந்திக் கடந்தார்.

## செயற்பாடு 12

**பொருத்தமான தினங்களை இனங்காண்போம். இணைப்போம்.**

1 

மகளிர் தினம்

2 

உலக சுற்றாடல் தினம்

3 

முதியோர் தினம்

4 

அன்னையர் தினம்

5 

ஆசிரியர் தினம்

6 

தந்தையர் தினம்

## செயற்பாடு 13

**சோடிகளாக இணைவோம். வேறு தினங்களைக் கண்டறிவோம். எழுதுவோம்.**



## செயற்பாடு 14

**உதாரணத்தை அவதானிப்போம். இடைவெளி நிரப்புவோம்.**

**அம்மா, அப்பா, மாலா, அக்கா, அண்ணா**

1. அம்மாவோடு போகிறேன்.
2. ________________ வருகின்றேன்.
3. ________________ விளையாடுகின்றேன்.
4. ________________ சமைக்கின்றேன்.
5. ________________ படிக்கின்றேன்.

**தம்பி, தங்கை, சித்தி, மாமி, வாணி**

6. மாமியோடு போகின்றேன்.
7. ________________ வருகின்றேன்.
8. ________________ விளையாடுகின்றேன்.
9. ________________ சமைக்கின்றேன்.
10. ________________ படிக்கின்றேன்.

சிறுவர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள், நண்பர்கள்

11. சிறுவர்களோடு விளையாடுகின்றேன்.

12. ____________ படிக்கின்றேன்.

13. ____________ கதைக்கின்றேன்.

14. ____________ சாப்பிடுகின்றேன்.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்

39



கல்விப் பணிப்பாளர்

தலைவர்கள்

எதிர் காலத்தை

சிறப்பிப்பார்

அழைக்கின்றோம்

வரவேற்பு

சுதந்திரமாக

உரிமைகள்

சுற்றாடல்

மதிப்பளித்தல்



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයයි |
| 1. ප්‍රවෘත්ති පත්‍රයක් කියවා තේරුම් ගැනීම | | | |
| 2. ආරාධනා පත්‍රයක් කියවා අවබෝධ කර ගැනීම | | | |
| 3. "ஓடு" යොදා වාක්‍ය නිර්මාණය කිරීම | | | |
| 4. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී උච්චාරණය කිරීම | | | |

# 15 எனது ஊர்

## செயற்பாடு 1

**படங்களைப் பார்ப்போம். கலந்துரையாடுவோம்.**













எமது நாட்டில் பல தீவுகள் உள்ளன. அவற்றில் நெடுந்தீவும் ஒன்றாகும். இதனை 'டெல்ப்' என்று கூறுவார்கள். இங்கே பல புதுமைகள் உள்ளன.

## செயற்பாடு 2 (40)

**ஆசிரியரின் உதவியுடன் உரையாடலைச் செவிமடுப்போம். விடை அளிப்போம்.**

(பருந்து கிளியைத் துரத்திக்கொண்டு சென்றது. களைத்துப் போன கிளி தனது ஊர் மதில்மேல் உட்கார்ந்தது.)

● கிளி ▲ பருந்து

● பருந்தாரே வருக, வருக வணக்கம். என்ன யோசிக்கிறீர்? என்னை இனி ஒன்றும் செய்ய முடியாது. இது எனது ஊர். இங்கு வருபவர்கள் எனது நண்பர்கள். நாங்கள் அவர்களை வருக வருக என வரவேற்போம்.

▲ (பருந்து கிளியின் பேச்சில் மயங்கியது.) நான் உன்னைப் பிடித்து உண்பதற்குத் துரத்தினேன். நீயோ என்னை வரவேற்கிறாய். நல்லது கிளியாரே. இது என்ன புதுவிதமான மதிலாக இருக்கிறதே.

● இதுதான் எனது ஊரில் உள்ள புதுமை.

▲ எனது ஊர், எனது ஊர் என்று பெருமையாகச் சொல்கிறீர். உமது ஊரின் பெயர் என்ன?

● எனது ஊர் நெடுந்தீவு. இது அழகான சிறிய ஊர்.

▲ தீவு என்றால் என்ன?

● நான்கு பக்கமும் கடலால் சூழப்பட்ட நிலப்பகுதி தீவு.




▲ இப்படி வேறு தீவுகளும் உள்ளனவா?

● ஆம் பருந்தாரே! அனலை தீவு, நயினாதீவு, எழுவை தீவு, பாலைதீவு என பல தீவுகள் உள்ளன. இந்தத் தீவுகளைப் பற்றிக் கேள்விப்படவில்லையா?

▲ இல்லை அங்கெல்லாம் இனித்தான் போகவேணும். இப்போ உங்களின் ஊரைச்சுற்றிப் பார்ப்போமா?

● பருந்தாரே! இந்த மதிலைப் பற்றிச் சொல்கிறேன். எனது ஊர் கற்கள் நிறைந்த பூமி. நிலத்திலிருந்து கற்களைக் கிளறி எடுப்பார்கள். அவற்றை ஒன்றின் மேல் ஒன்றாக வைத்து அடுக்குவார்கள். அவ்வளவுதான் அழகான மதிலாகி விடும்.

▲ புதுமையாகத்தான் இருக்கிறது.

● அதோ அந்தப் பெரிய மரத்தைப் பாருங்கள். அதிசயமாக இருக்கும்.

▲ இது என்ன குகையா?

● இல்லை மரத்தின் அடிப்பகுதி. இதில் வீடு போல பாதுகாப்பாக நாம் இருக்கலாம்.

▲ (மரத்தைச் சுற்றிப் பார்க்கிறது) நான் இப்படிபட்ட மரத்தைக் கண்டதே இல்லை. அது என்ன உயரத்தில் கூடு தெரிகிறது?

● அதுவா? பழையகாலத்தில் புறாக்கள்தான் செய்திகளைக் கொண்டு சென்றன. அவை இருந்த கூடு இதுதான். புறாக்கள் இப்போதும் அதற்குள் இருக்கின்றன.

▲ அதோ பெரிய மனிதனின் காலடி போலத் தெரிகிறதே. இவ்வளவு பெரிய மனிதன் இருந்தானா?

● இராட்சத மனிதன் வாழ்ந்தான் எனச் சொல்லப்படுகிறது. அனுமானின் காலடி என்றும் கூறுகிறார்கள்.

▲ அதோ கூட்டம் கூட்டமாக நிற்கின்றவை கழுதைகளா?

● இல்லை. அவை குதிரைகள்.



▲ இயற்கை அழகு நிறைந்த ஊர். பார்க்க நிறைய உள்ளன. நான் எனது குடும்பத்தைக் கூட்டி கொண்டு வரப்போகிறேன்.

● அதோ உல்லாசப் பிரயாணிகள் வருகிறார்கள். அருகில் வாருங்கோ. எங்கள் இருவரையும் படம் எடுக்கட்டும். (பருந்தும் கிளியும் சேர்ந்து இருக்கின்றன.)

## சொல்அறிமுகம்

| | | |
|---|---|---|
| குதிரை | - | අශ්වයා |
| மதில் | - | තාප්පය |
| குகை | - | ගුහාව |
| புறாக்கூடு | - | පරෙවි කූඩුව |
| காலடி | - | අඩි සලකුණ |
| இராட்சத மனிதன் | - | රකුසු මිනිසා |
| அனுமான் | - | හනුමා |
| அதிசயம் | - | පුදුමය |
| தீவு | - | දූපත |
| பருந்து | - | උකුස්සා |

## செயற்பாடு 3 (40)

**பின்வருவன சரியாயின் (✓) எனவும் பிழையாயின் (✗) எனவும் அடையாளமிடுவோம்.**

1. நெடுந்தீவு அழகான சிறிய ஊர்.
2. தீவு என்பது மூன்று பக்கமும் கடலால் சூழப்பட்டது.
3. பழைய காலத்தில் புறாக்கள் செய்திகளைக் கொண்டு சென்றன.

## செயற்பாடு 4 (40)

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுவோம்.**

1. கிளியின் ஊரின் பெயர் என்ன?
2. தீவு என்றால் என்ன?
3. இரண்டு தீவுகளின் பெயர்களைத் தருக.
4. செய்திகளைக் கொண்டு செல்லும் பறவை எது?

## செயற்பாடு 5

**படங்களுக்குப் பொருத்தமான முறையில் இலக்கமிட்டுத் தொடர்புபடுத்துவோம்.**













| | | | | | |
|---|---|---|---|---|---|
| புறாக் கூடு இருக்கிறது. | 4 | கற்களால் அடுக்கிய மதில் | 6 | குதிரைகள் நிறைய இருக்கின்றன. | 1 |
| இராட்சத மனிதனின் காலடி உள்ளது. | 2 | பெரிய மரத்தின் அடியில் குகை போல உள்ளது. | 5 | பழைய காலத்துக் கோட்டை இருக்கிறது. | 3 |

## செயற்பாடு 6

**பின்வரும் பன்மைச் சொற்களுக்குப் பொருத்தமான ஒருமைச் சொற்களை எழுதுவோம்.**

| பன்மை | ஒருமை |
|---|---|
| நாம் | ____________ |
| குதிரைகள் | ____________ |
| உல்லாசப்பிரயாணிகள் | ____________ |
| வரவேற்போம் | ____________ |
| பார்ப்போம் | ____________ |
| அடுக்குவார்கள் | ____________ |

## செயற்பாடு 7

**எதிர்க் கருத்துச் சொற்களை எழுதுவோம்.**

| சிறுமை, பள்ளம், பழைமை, செயற்கை, குறைய | |
|---|---|
| 1. புதுமை | பழமை |
| 2. இயற்கை | ____________ |
| 3. பெருமை | ____________ |
| 4. உயரம் | ____________ |
| 5. நிறைய | ____________ |

## செயற்பாடு 8

**பொருத்தமான சொற்களை வைத்து இடைவெளி நிரப்புவோம்.**

1. ஒரு கூடு ____________________ இருக்கிறது.
   (உயரத்தில், பள்ளத்தில், நிலத்தில்)

2. இராட்சத மனிதனின் காலடி ____________________
   (சிறியது, அழகானது, பெரியது)

3. மரத்தில் ____________________ பகுதியில் குகைபோலத் தெரிகிறது.
   (மேல், நடு, அடி)

4. ____________________ கூட்டமாக நிற்கின்றன.
   (புறாக்கள், கழுதைகள், குதிரைகள்)

5. நெடுந்தீவு ____________________ நிறைந்த பூமி.
   (மரங்கள், கற்கள், பறவைகள்)

## செயற்பாடு 9

**பின்வரும் இடைவெளிகளுக்குப் பொருத்தமான சொற்களை எழுதி கருத்துள்ள பந்தியாக மாற்றுவோம்.**

**இன, பள்ளிவாசல்கள், அழகு, விவசாயம், வடக்கு, யாழ்ப்பாணம்**

எனது ஊர் ______________ அது ______________ மாகாணத்தில் உள்ளது. இது இயற்கை ______________ நிறைந்தது. இங்கு பல ______________ மக்கள் வாழ்கிறார்கள். இங்கே கோயில்கள், விகாரைகள், தேவாலயங்கள் ______________ உள்ளன. இங்குள்ள மக்களின் பிரதான தொழில் ______________

## செயற்பாடு 10

**பின்வரும் சொற்களைப் பயன்படுத்தி எனது ஊர் பற்றி ஒரு பந்தி எழுதுவோம்.**

| | | |
|---|---|---|
| பாடசாலை | இயற்கை | பொழுதுபோக்கு |
| வாழ்கிறார்கள் | ஒற்றுமை | வயல்கள் |
| கோயில் | அமைதி<br>விருப்பம் | உணவு |
| விவசாயம் | அழகானவீடுகள் | மரங்கள் |

## செயற்பாடு 11

''எமது ஊர்'' பற்றிய தகவல்கள் கொண்ட படங்களைச் சேகரிப்போம். ஊரைப் பற்றிப் பேசுவோம்.



# செவிமடுப்போம் உச்சரிப்போம்



**41**

| | |
|---|---|
| வருபவர்கள் | அடிப்பகுதி |
| வரவேற்போம் | அழகானவீடுகள் |
| பிரபலம் | உபசரிக்கிறாய் |
| பிரயாணி | பழையகாலம் |
| நண்பர்கள் | உல்லாசப் பிரயாணிகள் |
| பருந்து | கழுதைக் கூட்டம் |
| பாதுகாப்பு | |



## දැන් මට පුළුවන්

| | ✓ ලකුණු කරන්න | | |
|---|---|---|---|
| | ඉතා හොඳයි | හොඳයි | සාමාන්‍යයි |
| 1. සංවාදයකට සවන් දී තේරුම් ගැනීම | | | |
| 2. ඒකවචන බහුවචනයෙන් ලිවීම | | | |
| 3. මෙම පාඩමේ යෙදෙන වචනවලට සවන් දී උච්චාරණය කිරීම | | | |